# சமயத் தத்துவம்

## PHILOSOPHY OF RELIGION



M. மகாராஜன் M.A. (Ph. D.)

வெளியிடுவோர் :

ஸ்ரீ பாண்டியன் பதிப்பகம்
108, உஸ்மான் ரோடு
தியாகராயநகர் சென்னை-600 017

பேராசிரியர், கு. கோவிந்தசாமி எம். ஏ. எம். மெட்,
தமிழ்த்துறைத் தலைவர்,
குருநானக் கல்லூரி, சென்னை.
முன்னாள் கொழும்புத் திட்ட வல்லுநர்,
சிங்கப்பூர் அரசு.

# அணிந்துரை

தமிழும் தத்துவமும் மெத்தவும் ஒத்துப்போவன. இடைக்காலத் தமிழிலக்கியங்களில் தத்துவமில்லாத இலக்கியங்களே இல்லை எனலாம். அத்தகைய தத்துவத்தைக் கல்லூரிகளில் தமிழில் கற்பிக்கும் காலம் வந்துவிட்டது. திரு. மகாராஜன் அவர்களுடைய கன்னி முயற்சி அவ்வாறு கற்போர்க்கு உதவும் வகையில் அமைந்துள்ளது.

நாகரிக முதிர்ச்சியற்ற மக்களின் சமயம், பண்பாடு, இறைவனை வழிபடும் முறை, ஆவிகட்கு அவர்கள் கொடுத்த மதிப்பு, குலமரபு, சின்ன முறைமை. முதலிய கருத்துக்களை இந்நூலில் தெளிவுபட விளக்கி யுள்ளார்.

குழுவினரிடையே அமைந்திருந்த ஒற்றுமையுணர்ச்சியே அனைத்திற்கும் தலையாய காரணம் என்பதனையும் இங்கு சுட்டிக் காட்டியுள்ளார். ஆவியுலகக் கோட்பாடு பற்றி ஓரளவே கற்றோரும் ஐயமின்றி உணருமாறு விளக்கம் கொடுத்துள்ளார். பழங்குடி மக்களிடையே திருமணங்கள் ஒப்பந்த அடிப்படையில் நடைபெறவில்லை. என்பதனைக் காரணத்துடன் இந்நூலில் விளக்கியுள்ளார்.

"தினை விதைத்தவன் தினையறுப்பான்
வினை விதைத்தவன் வினையறுப்பான்."

என்ற பழமொழியின் நடைமுறையினை படம் பிடித்துக் காட்டியுள்ளார். பல தத்துவ ஞானிகளின் கருத்துக்களை சுவைபடத் தொகுத்துள்ளார்.

தத்துவத்தை கற்க விழையும் மற்றோரும் படித்துப் பயன் பெற வேண்டிய நூலிது. தமிழ் கூறும் தத்துவ நல்லுலகம் இந்நூலை வரவேற்கும் என்பதில் எனக்குச் சற்றும் ஐயமில்லை. வாழ்க தமிழ்! வளர்க தத்துவம்!!

அன்புள்ள
கு. கோவிந்தசாமி

# முன்னுரை

"சமயத் தத்துவம்" இந் நூல் கல்லூரி மாணவர்களுக்கு அதாவது பி. ஏ, எம். ஏ, எம். பில் படிக்கும் மாணவர் களுக்கு அறிமுகப் படுத்தும் ஒரு நோக்கத்தோடு இந் நூல் எழுதப்பட்டது. "சமயத்தத்துவம்" என்ருல் என்ன என் பதை ஒருவன் அறிந்து கொள்ளுவதற்கு முன்னர் அவன் சமயம் என்ருல் என்ன? தத்துவம் என்ருல் என்ன? இவற்றின் கருத்தினை முன்னர் அறிந்து கொண்ட பிறகுதான் சமயத் தத்துவத்தைப் பற்றிய கருத்தினை புரிந்துகொள்ள முடியும்.

"Philosophy of Religion" ஆங்கிலத்தில் எழுதியது மட்டும் அல்லாமல் இதனை நான் தமிழிலும் மொழி பெயர்த் திருப்பது தான் இந்நூல்.

முதல் அத்தியாயத்தில் சமய வரலாற்றைப் பற்றி சொல்லப்படுகிறது. அதில் நாகரீக முதிர்ச்சியற்ற சமயத் தொடர்புடையோரின் உட்கருத்தினைப் பற்றி சான்று களுடன் விளக்கப்படுகிறது. பழங்குடி மக்கள் ஆவியுலகக் கோட்பாட்டின் மேல் வைத்திருக்கும் நம்பிக்கை, மூதாதை யரின் வழிபாடு பற்றியும், இன மரபுச்சின்ன முறைமை (Totemism) பற்றியும், இந்த முறைமை நாளடைவில் வளர்ச்சியுற்று ஒரு தனிப்பட்டவரின் அனுபவத்தின் வழியாக பிரதிபலிக்கின்றது. பொதுவாக இந்த முறைமையின் கருத்தினை இப்பொழுது "கோத்திரம்" என்று சொல்லு கிரும். உயிரில்லா பொருள்களுக்கும் இயற்கை நிகழ்ச்சி களுக்கும் ஒரு ஆன்மாவைகற்பிக்கும் கொள்கை "ஆவியுலகக் கோட்பாடு" எனப்படும்.

இரண்டாம் அத்தியாயத்தில் தேசிய மதம் வளர்ச்சி அடைந்ததற்கு காரணம் அயலாருடன் பழங்குடிமக்கள் சில சமயங்களில் வலுக்கட்டாயமாக ஒன்று சேர்ந்து எதிரிகளிட

மிருந்து வரும் ஆபத்தைத் தடுக்க ஒத்துழைப்பார்கள். அதனுல் இன உறவை சேர்ந்த உறவினர்கள் இந்த சிக்கலான நிலேயிலும் பழங்குடிமக்களே (Tribal People) ஒன்று சேர்த்து தேசத்திற்கு அழைத்து வந்தனர். அதனுல்தான் தேசீய மதமும் வளர்ச்சி அடைந்தது. பிறகு தேசீய மதத்தின் சிறப்புக் கூறுகளேப் பற்றியும் விளக்கப்படுகிறது.

மூன்ரும் அத்தியாயத்தில் தேசீய மதம் எவ்வாறு உலகப் பொதுச்சமயமாக மாறியது பற்றியது பற்றியும் தேசீய மதத் திற்கும் உலகப் பொதுச் சமயத்திற்கும் உள்ள தனிச் சிறப்பு. தேசீய மதம் மிகவும் உட்புறமாகவும் தனியியல் தன்மை யுடையதாகவும் இருக்கும். அனுல் உலகப் பொதுச்சமயமோ (Universal Religion) அவ்வாறு இல்லாமல் மிகவும் பொது மையாக உள்ளது.

நான்காம் அத்தியாயத்தில் சமய உளவியல் (Psychology of Religion) பற்றி சான்றுகளுடன் விளக்கப்படுகிறது. பிறகு ஐந்தாம் அத்தியாயத்தில் உணர்த்தப்பட்ட அறிவின் (Revelation) சிறப்பைப் பற்றியும் அதன் கருத்திளேயும் பற்றி விளக்கிய பின்னர் (Reason & Revelation) உணர்த்தப்பட்ட அறிவுக்கும், மெய்க்காரணத்திற்கும் உள்ள தொடர்பு பற்றி யும் விளக்கிக் கூறப்படுகிறது.

உள்ளுணர்வு என்பது என்ன? உள்ளுணர்வைப் பற்றி பல இந்திய தத்துவஞானிகளுடைய கருத்திஜனக் கூறப்படு கிறது.

பிறகு நியாயத் தத்துவ ஞானிகளுடைய இறைவன் உளன் என்பதனே நிரூபிக்க ஒன்பது வாதங்களேப் பற்றியும். இறைவனின் ஆளுமை பற்றியும் இறைவனும், பரம் பொருளும் பற்றியும்விளக்கப்படுகிறது. அது மட்டுமல்லாமல் கொடுமையினுல் வரும் பிரச்சினே பற்றியும் (The Problem of evil) பல சான்றுகளுடன் விளக்கப்படுகிறது.

சமயத் தத்துவம் பற்றி நான் ஒரு நூல் எழுதவேண்டும் என்ற ஆர்வத்தை உண்டாக்கிய முன்னாள் துணை வேந்தர் உயர் திரு. மால்கம் ஆதிசேஷையா அவர்களுக்கு என் உள மார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலுக்கு அணிந்துரை எழுதிய குருநானக் கல்லூரி யில் தமிழ்த்துறையில் பேராசிரியராக பணியாற்றும் திரு. K. கோவிந்தசாமி M. A, M. Ed. அவர்களுக்கு என் உள மார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்புத்தகத்தை வெளியிட முழு உரிமைபெற்று, பதிப் பித்து வெளியிட்ட ஸ்ரீ பாண்டியன் பதிப்பக உரிமையாளர் திரு. பா. ஜெயபாண்டியன் அவர்களுக்கு என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

சென்னை,<br>ஆகஸ்டு 1978

எம். மகாராஜன்

# உள்ளுறை

## Contents

# 1. சமய வரலாறு

முகவுரை:— அறிவியலின் தன்மையை உணர்வதற்கு முன்னர் மனிதன் ஒரு பூர்ண தத்துவஞானியாக இருந்திருக்கிருன். இதுபோன்ற இடங்களில் தத்துவத்தின் பொருளானது தெளிவான கொள்கையின் அடிப்படையில் எழுந்தவை அல்ல. மேலும் பொதுவாக அணுகும் முறைகளேயும் பிரச்சனைகளுக்கு தீர்வு காணும் வழியினையும், புத்தி கூர்மை தன்மையின் அடிப்படையில் தத்துவம் அமைந்துள்ளது,

தத்துவத்தின் தெளிவான கொள்கைகளேயும், செயல் முறைகளேயும் தெளிவாக வரையறுத்தல் இயலாத காரியமாகும். மேலும் மதசம்பந்தமான பொருள் பற்றி விளக்கம் கூற முற்படும்பொழுது அவற்றின் ஆரம்பத்தில் மத சம்பந்தமான தத்துவங்களேயும் வளர்ச்சியையும் கொஞ்சமாவது அறிந்திருக்க வேண்டும். ஆரம்பகாலத்தில் மதத்தைப் பற்றி தெரிந்து கொள்வதற்கு மூலப்பொருளாக என்ன முறையில், என்ன தத்துவத்தின் அடிப்படையில் மதமானது பாகுபடுகின்றது என்ற விஞவானது எழுகின்றது.

**மதத்தின் பாகுபாடுகள்:—** சிபெக் (Siebeck) என்னும் தத்துவஞானி, அன்ஞருடைய மத சம்பந்தமான தத்துவம் "Religions philosophie" வெளியீட்டினில் மூன்று வகை மதப்பாகுபாடுகளே வரையறுக்கின்ருர்.

ஒன்று மதம் ஆரம்பகாலத்தில் இருந்த நிலே, இரண்டாவதாக அதனுடைய ஒழுக்கத்தன்மை, மூன்ருவதாக மதம் இழந்ததை பெறும் நிலே (Primitive Religion, Morality

Religion, Redemptive Religion) என்று பாகுபடுத்தி கூறு கின்றுர், ஆனுல் அவர் இந்த இடத்தில் பாகுபடுத்தி குறிப் பிடுகின்ற ஒழுக்கச் சம்பந்தமான மதமும், மதம் இழந்ததை பெறும் நிலேயும் தெளிவாக விளக்கப்படவில்லே.

அதே நேரத்தில் தில்லி (Tiele) என்னும் தத்துவஞானி இயற்கையான மதத்திற்கும் (Natural Religion) ஒழுக்க சம்பந்தப்பட்டமதத்திற்கும் (Ethical Religion) விரிவானபாகு பாட்டினே திருப்தி அளிக்கும் வகையில் எடுத்துக் காட்டி யுள்ளார்.

ஆனுல் இந்த பாகுபாடு கோட்பாட்டின் அடிப்படையில் அமைந்துள்ளது. அதே நேரத்தில் நடைமுறையில் அவற்றின் எல்கை (boundary) தெளிவாக விளக்கப்படவில்லே.

மத மதிப்பீட்டு வரலாறு மத வளர்ச்சியிலும், மத சம்பந்தமான உணர்ச்சியிலும் இரண்டு நுண்ணிய எண்ணங் களே வற்புறுத்தி உரைக்கின்றன. ஒன்று பழங்குடி நிலேயி லிருந்து நிலே மாறுபட்டு தேசிய மதமாதலால்; இரண்டாவது தேசீய மதத்திலிருந்து எல்லாவற்றையும் உட்படுத்திய மத மாக மாறுபடுகிறது.

## மலங்குடி சார்ந்த சமயம் (Tribal Religion)

நாகரிகம் முதிர்ச்சியற்ற சமயத் தொடர்புடையோரின் உட்கருத்து (primitive religions ideas):—

ஒரு மனிதனுடைய சமய உணர்வில் தோன்றிய உட் கருத்துக்களே அவனுடைய தோற்றம், படிவம் அவனேச் சார்ந்த சூழ்நிலேகளின் அடிப்படையில் விளக்க இயலாது இவ்வுலகில் முதல் இடத்தில் ஆவியுலகக் கோட்பாளர்கள் (Animistic) இருக்கின்றனர். அவர்கள் கடவுள் பற்று மிக்க வர்களாக இருப்பதில்லே. அதே சமயத்தில் மதச்சம்பந்தப் பட்ட கோட்பாடு வளர்ச்சியின் அடிப்படையில் அமை கின்றன. நாகரீக முதிர்ச்சியற்ற மக்கள் பெரும்பாலும்

எல்லா பொருள்களும் உயிருடன் வாழுவதாக கருதுவதுடன் அவைகளுக்கு ஆத்மாவும் இருப்பதாக நம்புகின்றனர். ஆனல் எல்லா பொருள்களும் உயிருடன் இருப்பதாக நம்பும் நாகரீக முதிர்ச்சியற்ற மக்கள் அவற்றினை திறனய்வு செய்து நன்கு வரையறுத்து அக்கோட்பாடுகளுக்கு விளக்கம் கொடுத்து உயிர் ஊட்டி நவீன காலத்தில் உயிர் நூல் வல்லுநர்கள் (Modern BIOLOGISTS) ஏற்றுக் கொள்ளுகின்றனர். உயிர் வாழ்வதின் பொருட்டு ஒரு பகுதியிலுள்ள ஒருவரோ, அல்லது அவற்றின் அங்கத்தினரோ காரியங்களை செய்கின் றனர். அவற்றிற்கேற்ப அவர்களையும் மாற்றி அமைத்துக் கொள்கின்றனர். இடம் விட்டு இடம் மாறியும் உயிர் வாழ் வதின் பொருட்டு வழிமரபினை அமைத்துக் கொள்கின்றனர். டைலர் (Tylor) என்னும் தத்துவ ஞானியின் சிறப்புமிக்க நாகரீக முதிர்ச்சியற்ற பண்பாடு என்ற புத்தகத்தில் (Primitive culture) எடுத்துக்காட்டுகின்றுர். சில சமயங்களில் மனித பண்பாட்டினை எல்லா இடங்களிலும் இயற்கையின் அடிப்படையில் குறிப்பிடத்தக்க ஒரு ஆத்மாவாக விளங்கு கிருன். உதாரணமாக:—மரங்கள், ஓடைகள், மலைச்சரிவுகள், மேகங்கள், கற்கள், நட்சத்திரங்கள்.

டைலர் (Tylor) கோட்பாட்டின்படி உயிரில்லா பொருள் களுக்கும், இயற்கையின் நிகழ்ச்சிகளுக்கும் ஒரே ஆன்மாவே இவ்வுலகத்திற்கு கற்பிக்கும் நோக்கத்துடன் மதமானது எழுச்சியுற்றது என்கிருர்.

(Hoffding) என்னும் தத்துவஞானி அவற்றை பற்றி குறிப்பிடும் பொழுது மிகவும் ஆரம்ப நிலையில் அமைந்துள்ள மனித மெய்விளக்கியல் ("The most elementary of human Philosophies") என்பதைபற்றி குறிப்பிடுகின்றுர்.

ஆவியுலகக் கோட்பாடு (Spiritism):— பொதுவாக ஆவி யுலகக் கோட்பாளர்கள் நம்பிக்கையுள்ள முறைகளில் மாற்றம் ஏற்படும்பொழுது சிறகுகளே ஆவியுலகக் கோட் பாளர்கள் முழுதும் நம்பி வழிபடும் பொழுது அவற்றின் கீழ்

கண்டவாறு வரையறுக்கின்றனர். கட்டுப்பட்டுள்ள ஆத்மாவானது சுதந்திரமாக அமைதல் வேண்டும். அவ்வாறு அமைந்தால் ஆத்மா பின்னர் ஆவியாக மாறி சுதந்திரமாக நகரும் என்று எண்ணுகின்றனர். இது போன்ற மாற்றத்தின் மனிதனுடைய உளகியல் சார்ந்த அனுபவம் (Man's psychical experience) ஓர் முக்கிய பாகமாக அமைகின்றது.

உதாரணமாக:— தூக்கம் ஆத்மா ஒரு மனிதனுடைய இரண்டாம் நிலையில் கற்பனை செய்யும் வகையில் அமைகின்றது. ஒரு மனிதனுடைய இரண்டாவது நாகரீக முதிர்ச்சியற்ற எண்ணமாகவும் ஆத்மா அமைகின்றது அது உடம்பின் ஒரு பகுதியாகவும் இருக்கின்றது. அது சில நேரங்களில் காணப்படுகின்றது. துணிமணிகளை அணியவும் முடிகின்றது. ஆத்மாவுடன் பேசலாம், ஆத்மாவானது நம்முடைய உடம்பிற்குள்ளே அநேக காரியங்களை செய்கின்றது; இருந்தபோதிலும் அவற்றினை நாம் உடம்பினின்றும் வேறு படுத்திக் காட்டுகின்றோம். அதனை கண்ணால் பார்க்க முடியாது. கண்ணால் அடிக்கடி காணவும் முடியாது, ஆத்மாவானது மிகவும் வேகமாக பயணம் மேற்கொள்ளுகின்றது.

உடம்பு செல்ல முடியாத இடங்களுக்குக் கூட செல்லுகின்றது. ஆத்மாவை எளிதில் தொடமுடியாது. பல நோக்கங்களின் மிகவும் குறைந்த அழுத்தம் உடையதாகவும் பயன்படுகின்றது, மூச்சு விடுவதாகவும் இருக்கின்றது, உடம்பாகவும் இருக்கின்றது, வெப்பமாகவும், நிழலாகவும் அமைகின்றது.

ஆவியுலகக் கோட்பாடு என்ற பெயரின் அடிப்படையிலும் ஆன்மா, பிசாசு, ஆத்மா, சீற்றம், நிழல், ஆவி என்று பல பெயர்களில் ஆத்மா அழைக்கப்படுகின்றது. அவருடைய நம்பிக்கை நாகரீக முதிர்ச்சியற்ற மனிதன் என்ற புத்தகத்தின் அவருடைய ஆத்மா உடம்பினின்றும் பிரிக்கப்பட்டு இதர வழிகளில் நிரந்தரமாக காணப்படுகின்றது. அவருடைய கனவில் ஆத்மா இணைய முடியாத நிலையில்

இருக்கிறது. அவர் இறக்கின்றபொழுது ஆத்மாவானது அவருக்கு உறவு முறையில் அமைகின்றது. மேலும் இரண்டாவது பாலேவனமாகவும் அமைகின்றது. மீண்டும் அந்த ஆத்மா மரம் அல்லது இளவேனிற் காலமாக மாறுபட்டு பழைய நிலைக்கு திரும்ப வருகின்றது. இத்தத்துவத்தின் அடிப்படையில் ஆவியுலகக் கோட்பாட்டின் முதிற்நிலை ஆத்மா என்ற கோட்பாட்டின் வளர்ச்சியில் அமைகின்றது.

மூதாதை வழிபாடு (Ancestorworship) ஆவியுலகக் கோட்பாட்டின் பக்ககிளையாக மூதாதை வழிபாடு இருக்கிறது. பழங்குடிமக்களிடம் இறந்த பின் உண்டாகின்ற ஆவி பற்றிய பயம் எழுந்து வந்தது. பயம் என்கின்ற பிசாசுவானது அவர்களை சமாதிக்கு அழைத்து வந்ததாக எண்ணி வந்தனர். அவற்றின் பொருட்டு மூதாதையார்களை வழிபடுதல் என்னும் மூடப்பழக்கத்திஞல் பயங்கரமான அல்லது அச்சமான மனப்பான்மை மறையும் என்று கருதினர். அவற்றின் அடிப்படையில் அவர்களிடையே ஒரு ஒற்றுமை நிலவியது. பழங்குடிமக்களிடையே பல கருவிகளையும் அவர்களுக்கு உடைமையாகக் கொண்டு வழிபட்டு வந்ததை உயர்வாகக் கருதினர் மத்திய ஆசியா பழங்குடி மக்களிடை.யேயும், மேற்கித்திய ஆப்பிரிக்கா பழங்குடிமக்களிடையேயும் (Central Australian tribes and west African tribes) மேற்குறிப்பிட்டுள்ள வழிபாடானது நிலவி வந்தது.

## இன மரபுச்சின்ன முறை (Totemism)

இனமரபுச்சின்ன முறைமையானது மூதாதை வழிபாட்டுடன் மதச் சம்பந்தப்பட்ட கருத்துக்களில் ஒருமித்த எண்ணம் படைத்தது. அது வட அமெரிக்க, ஆப்பிரிக்கா ஆஸ்திரேலியா ஆகிய இடங்களில் காணப் படுகிறது. குலமரபுச் சின்னம் விலங்குகளிடையே விறுவிறுப்பாக, அமைந்திருந்த போதிலும், தாவர இனங்களிடையும் சில நேரங்களில் காணப்படுகிறது. அவைகளின் உயிர் வாழ்க்கை பழங்குடிமக்களிடையே அமைந்திருந்த சமுதாய

வாழ்க்கைக்குகட்டுப்பாடாகவும் இருந்திருக்கிறது. குலமரபுச் சின்னம் இரகசியத்தின் அடிப்படையில் இருக்கிறது. தெய்வ வழிபாடுடைய பழங்குடி மக்களிடையே பொதுவாகமதிப்புக் கொடுத்து அது போன்ற குழுக்களை உயிர் ஊட்டி வளர்த்து வருவதாகவும் இருக்கிறது. உயிரில்லா பொருள்களுக்கும் இயற்கை நிகழ்ச்சிகளுக்கும் ஒரு ஆன்மாவை கற்பிக்கும் கொள்கை ஆவியுலகக் கோட்பாடு எனப்படும், ஆவியுலகக் கோட்பாடு ஆரம்ப நிலையில் தனிப்பட்டவர்களுக்காக அப்பொழுது எழுகின்றது. நாளடைவில் வளர்ச்சியுற்று தனிப்பட்டவரின் அனுபவத்தின் வழியாக பிரதிபலிக்கின்றது. குலமரபுச் சின்னத்திற்கு (Totem) விளக்கம் கொடுக்கும்பொழுது குழவினரிடையே அமைகின்ற ஒற்றுமை உணர்ச்சியே ஆகும். உறவினரிடையே ஏற்படுகின்ற இரத்தப் பாசம் வாழ்க்கையில் அதனை காணமுடியாது. அது ஒரு அடையாள மாகவும் அமைகின்றது. மேலும் உத்தர வாதமாகவும் அமைகின்றது. எட்வேட் (Edward) என்னும் இனமரபுச் சின்னத்தை விளக்கிக்கூறும்பொழுது மிகவும் சாதாரணமானது அதிகப்படியான பழங்குடி மக்களின் மதமாகவும் இருக்கின்றது என்கிறார். "Totemism as the Sinplest and most primilive Religion ஜவான் (Jevon) இனமரபுச்சின்ன முறையை விளக்கிக்கூறும் பொழுது நவ நாகரிகமற்ற சமுதாயத்தின் படிவம் உலக அளவில் அது வளர்ச்சியுற்றது. என்று குறிப்பிடுகின்றார். (Most primitue form of society that it hasibeen worldwide).

அவற்றிலுள்ள முக்கியமான குறிப்பு கடவுள் தீர்மான மாக ஒரு பொழுதும் பழங்குடி வழிபடுவோர்களிடம் வருவதில்லை. மேலும் சமயக் கோட்பாடு ஆத்ம முறைக்கு எதிராகவும் அமைகின்றது. அவற்றை விசாரித்து பார்த்ததில் எதற்கும் அவனிடம் (God) காரணம் கேட்கும்பொழுது அவர் உதவி செய்வதில்லை. யாருக்கும் தீங்குசெய்வதில்லை. இதுபோன்ற பதிலானது வெளிப்படையில் பழங்குடி மதத்தினரிடையே அவர்களுடைய இரகசியத்தையும். பலகீனத்

தையும் வெளி காட்டுகிறது கோத்திரம் (Totem) பழங்குடி ்களிடையே ஆரம்பத்தில் ஒரு சிலருக்கு உரியது என்று கருதி வந்தனர். கொன்று உண்ணுதல் அப்பகுதியினரி டையே இருந்து ஒதுக்கி வைத்தனர். அவர்களை வணங்கியும் மதிப்புக் கொடுத்தும், எல்லா இடங்களிலும் முக்கியத்துவம் அளித்து வந்தனர். திருமணங்கள் ஒப்பந்த அடிப்படை யில்மேற்குறிப்பிட்ட கோத்திர ஆண் பெண்களிடையே நடைபெறவில்லை. ஏனென்ருல் அவர்களிடையே இரத்த உறவு இருக்கின்றது என்று கருதி வந்தனர்.

போலி கோட்பாடு : (FICTICISM)

போலிகோட்பாடு ஆனது ஆவியுகக் கோட்பாடுடன் முழுதும் செயற்கை வடிவில் அமைந்து வெளியாகின்றது. போலி கொள்கை வழக்கத்தின் கோட்பாட்டின்படி மனித உடம்பின் ஒரு பகுதியோ, ஒரு கல்லையோ, ஒரு கருவியையோ வைத்துக் கொள்ளலாம். கிங்ஸ் (Fetish) ஒரு வேட்டைக் காரணுகவும் பயன்பட்டான், ஒரு யுத்த வீரணுகவும் விளங் கிஞன். மனிதர்களையும், மிருகங்களையும் அடக்கி ஆண்டு வந்தான். அவைகளுக்கு சக்தி இல்லாதவாரும் செய் தான்.

Mana கோட்பாடு:

மாஞ கோட்பாட்டிற்கு விளக்கம் கொடுக்கும்பொழுது முயற்சி செய்து தனிப்பட்ட பலன் அடிப்படையில் நல்ல குணங்களிடைய அதிகாரம் அல்லது சக்தியின் பெயராகவும் இருக்கின்றது. மாஞ கோட்பாட்டின் பிரதான சொத்து ஒரு கல், அல்லது முயலின் பாதம், ஒரு மனிதனுடைய தனிப் பட்ட சக்தியையும், வீரத்தையும் அதிகரிக்கச் செய்து வந்தது. மலேசியாவின் பழங்குடி மக்கள் இதனை பல் வேறு பெயர்கள் வைத்து அழைத்து வந்தனர்.

உதாரணமாக:- ஆல்போன் இங்கஸ் மானிடு என்று குறிப் பிட்டனர். மனிதன் மாயையுடன் நெருங்கிய தொடர்பு கொண்டு இருக்கிருன். ஆன்மா கோட்பாடு (Anism) (Spritis-

psm), தத்துவ கோட்பாடு (Totemism) குலக்கோட்பாடு ஆகிய வற்றிலிருந்து மாறுபடுகிறது. மாஜ்யண்டரும், மாடானும் அதுப்பற்றி குறிப்பிடும்பொழுது பழங்குடி மக்களிடையே தோன்றிய முழுமதசம்பந்தப்பட்டவாழ்க்கை யும் நம்பிக்கையின் அடிப்படையில் எழுந்ததல்ல. அவற்றின் சில புரிந்து கொள்ள கூடியவை மனித அபிமானம் அற்றவை காணப்படாதவை தனிப்பட்டவர்களுக்கு அமையாமல் மூட நம்பிக்கையின் சக்தியாகும். எல்லா தத்துவங்களே அது ஏந்தி செல்லுகின்றன. எழுச்சியுற்ற, எழுச்சியற்ற அவர்கள் நடத்தும் வாழ்க்கையாகும்.

According to Majumdar and Madan, "Entire religious life of the primitives is born out of their belief certain understandable, impersonal, non-material and unindividu lazied super-natural power which takes a bode in all the objects, animate and inanimate, that exist in the world.

மாக்ஸ் மல்லர் என்னும் தத்துவஞானி மானுவைப்பற்றி விளக்கம் கூறும்பொழுது மானு என்பது ஒரு முயற்சி இயற்கைக்கு அப்பாற்பட்ட மனிதனின் சக்திக்கும் மேற் பட்டதாக அது இருக்கிறது.

உயர்ந்த மலைகள், நதிகள், இடி இதர இயற்கை சக்திகள் முதலியனமானு என்ற சக்தியின் அடிப்படையில் நிகழ்வதாக அக்காலத்திலுள்ள பழங்குடி மக்கள் நம்பிவந் தனர். இச்சக்தியானது நன்மையாகவும் இருக்கலாம் அல்லது தீமையாகவும் இருக்கலாம். அது ஆத்மாவுடன் தொடர்பு கொண்டுள்ளது. பிசாசுவாகவும் இருக்கலாம், இறந்த மனிதனுகவும் இருக்கலாம். உயிரோடு இருக்கும் பொருளா கவும் இருக்கலாம். HO என்ற மக்களும் முண்டா என்கிற பழங்குடி இனத்தவரும் சோட்டா நாக்பூர் பகுதியில் வாழ் கின்றவர்கள் பங்கா என்றும் அழைக்கப்படுகின்றனர்

**பங்காவின் தத்துவம்:-** பங்கா பழங்குடி மக்களின் மாயை யாக இருக்கிறது. மனிதனுக்கு அப்பாற்பட்டசக்தியை

உடையது அவற்றின்பின்னர். புயல், மழை, குளிர்ச்சி, வெள்ளம், தொற்று நோய்கள் பலம் பொருந்திய மிருகங்கள் எல்லாம் இருக்கின்றன. எல்லா இடங்களிலும் நடைபெறும் செயல்களுக்கெல்லாம் அடிப்படை சக்தியாக பங்கா இருக்கிறது எனவே அவர்கள் மாஞ என்ற வடிவத்தில் பங்கா இருக்கிறது என்று எண்ணுகின்றனர்.

**மாயமும் மதமும் :—**

மாயை யோசனேகள் மதத்தத்துவங்களுடன் இணைந்து செயல்படுகின்றது. மாயைப்பற்றி ஒருவன் அறிந்துகொள்ள அவன் வீட்டில் நடைபெறும் மதச் சடங்குகளிலும், விழாக்களிலும் வெளிப்படையாகக் காணலாம். ஆவியுலகக் கோட்பாடு மதம் போன்று அதற்கு முன்னரே அமைந்துள்ளது, மனிதனுக்கும், பொருள்களுக்கும் இடையே ஏற்படுகின்ற பாசத்தின் அடிப்படையில் அவற்றிலுள்ள நற்குணங்கள் செல்வாக்கு பெற்று விளங்குகின்றன. மனிதனுடைய நோக்கங்கள், செல்வாக்குகள் சாதகமாக அமைகின்றது. மாயையும் மதமும் இவற்றின் அடிப்படையில் மனிதனுடைய தேவைகளே திருப்தி அளிக்கும் நோக்கத்துடன் செயல்படுகின்றன. அவற்றினே செயல்முறைக்குக் கொண்டு வரும்போது பல்வேறு முறைகளே கையாளுகின்றன. ஒரு சில வேளேகளில் மாயை என்பது மதத்தினின்றும் படிப்படியாக வந்ததாக காட்சியளித்த போதிலும் அது மதத்தினே பாதுகாக்கப்படுகின்றது. மாயையானது லாபத்தின் அடிப்படையில் அமைந்திருந்த போதிலும் அவற்றின் வெற்றி வழிப்பாட்டின் அடிப்படையில் அமைந்திருக்கின்றது.

டாக்டர் பிரோசர் விளக்கம் கொடுக்கும்போது மதம் என்பது மாயையின் தோல்வியின் பயஞக எழுகின்றது என்று வலியுறுத்திக் கூறுகின்றூர்.

கால்வே என்னும் தத்துவஞானி அவருடைய கருத்தினே ஏற்றுக் கொள்வதில்லே. அவர் குறிப்பிடும்போது மாயைக்கும்

மந்திரத்திற்கும் இரண்டு வேறுபாடுகள் உண்டு என்று விவாதிக்கின்றார்.

(1) மதக்கோட்பாடானது மாயையைச் சார்ந்திருக்கிறது என்றும் மாயை என்பது அவற்றினை கட்டுப் படுத்துகின்றது என்றும் குறிப்பிடுகின்றார்.

(2) மதம் என்பது நம்பிக்கையின் அடிப்படையால் எழுவதாகும். ஆனால் மாயை என்பது தானாகவே உறுதியால் அடிப்படையில் ஊக்குவிக்கும் வகையில் எழுகின்றது என்பதை வற்புறுத்தி உரைக்கின்றார். மதமும் மாயையும் ஒன்றுக்கொன்று சுயமாக அவதரித்தது இல்லை. ஆனால் இரண்டு பழங்குடி இனத்தவர்களிடம் பொதுவாக சமமான அளவு இடம் பெற்று இருந்தன என்றும் தெரிய வருகின்றது. மனித மனத்தில் இருந்து அவைகள் ஆரம்பமாகிய போதிலும் அவற்றின் நோக்கம் உலகின் நன்வழியில் அமைகின்றது. அவற்றின் செயல் முறைகள் முடிவாய் வித்தியாசமுடன் காணப்படுகின்றன.

மாயையின் நோக்கங்கள் வழக்கத்தில் குறுக்கிடுகின்றன. அவைகள் ஆரம்பத்தில் மதசம்பந்தமாக அமைந்திருந்த போதிலும் மதசடங்குகளில் அவைகள் சில நேரங்களில் பிரித்து காண்பிக்கப்படுகின்றன. மாயையுடன் வழக்கங்களிலிருந்து (Magical Tractice) பிரிக்க முடியாதவையாகவும் இருக்கின்றன.

உதாரணமாக போலி கோட்பாடு (Fetistism) சமுதாயத்தில் மதத்தின் கீழ்நிலையில் மாயை அமைந்துள்ளது. ஆன்மாவின் வளர்ச்சி வழியில் செயல்படுகின்றது.

எல்லா முறைகளிலும் மாயையானது மானுவின் பிரதிபலிப்பாக இருக்கின்றது மனித சக்திக்கு அப்பாற்பட்டதாகவும் திறமையாக சரியானமுறையில் செயல்படுவதாகவும் சில நேரங்களில் அமைகின்றது. மனோதத்துவ விளக்கத்தின் அடிப்படையில் மாயையின் தோற்றம் மூன்று நிலைகளில் அமைந்துள்ளது.

(1) ஆரம்பத்தில் உணர்ச்சிகள் அடிப்படையில் இயல்பாகவே தானே இயங்கும் விதத்தில் உருவாகுகின்றது.

(2) குழுக்களின் எண்ணமாகவும் அமைகின்றது.

(3) தர்க்க சாஸ்திரத்தின் தவறான வாத மடங்கியுள்ள போஸ்ட்ஹாக் (Post hoc) இர்க்கோ ஹாக் (ergo hoc) முடிவில் மாயையின் சக்தியை மதிப்பீடு செய்வதாக அமைகின்றது. சமுதாயத்தின் அங்கீகரிக்கப்பட்ட மதிப்பீட்டினை காப்பாற்றும் நிலையில் மாயை அமையும்போது குலத்தின் அடிப்படையால் முழுமையாக செயல்படுகின்றது. குடும்பம், தனிப்பட்டவர்களின் மதம் மதச்சார்பற்ற முறைகளிலும் அவ்வாறே செயல்படுகின்றது. விழாக்களில் ஏராளமாக பயன்படும் பயிர்கள் மாயை மதத்தின் அடிப்படையில் அராய்வதாகவும், கால்நடைகள் அதிகபடுத்தும் போதும் மதத்தின் வெற்றியிலும், மாயை மதத்திநின்றும் தெளிவாக இருக்கின்றது. கறுப்பு மாயை தீய வேலைகளில் பயன்படுகின்றது. தனிப்பட்டவர்களை பகைமையாக கருதும்போது, பொது மக்களால் கண்டனம் செயல்படும்போது அது மதமாக கருதப்படுவதில்லை.

**பழங்குடி மதத்தின் முக்கிய தன்மைகள் :**

பழங்குடி மதத்தின் ஆன்மா வளர்ச்சி காரணமாகவும் அவற்றின் வழியில் அழைத்துச் செல்வதாகவும் இருக்கின்றது பழங்குடி குழுவினில் இரத்தபாச கோட்பாட்டின் அடிப்படையில் எல்லா அங்கத்தினர்களையும் ஒற்றுமையாக சாய்க்கின்றது. மத சமுதாயத்தின் ஆன்மா கோட்பாடு, சகோதரத்துவ வளர்ச்சியின் அடிப்படையால் காணப்படுகின்றது. மதத்தின் வளர்ச்சி இயற்கைகளினின்றும் ஆன்மா வாய்ப்புக்குரிய வளர்ச்சியாகவும் அமைகின்றது.

# 2. தேசீய மதம்

முகவுரை : தேசிய மதத்துடன், பழங்குடிமக்களின் சமயத்தை ஒப்பிடும் பொழுது தேசீயமதம் மிகவும் பெரிய தாக்கப்பெற்ற பரந்த காட்சியினேயும், தனிச் சிறப்பு வாய்ந்த மனநிறைவினுடைய சமயப்பற்ருர்வம் வாய்ந்த உணர்ச்சிகளேயும் வெளிப்படுத்துகிறது

**பழங்குடி மதத்திற்கும், தேசிய மதத்திற்கும் உள்ள மாறுபாடு:**-மனிதவரலாறு சமுதாய மாற்றத்திற்கு ஒரு செய்முறையாகவும், அதனுடைய வளர்ச்சிக்கு ஒரு முக்கியத்துவம் இல்லே என்பது முடிவு. பழங்குடி மக்கள் ஒரு பெரிய சமுதாயத்துடன் ஒன்று சேருவது இன்றியமையாத காரியமாகும். பிறகு ஒரு புதிய இனக் கூட்டம் ஒரு புதிய பரந்த நோக்கமுடைய ஒற்றுமையின் அடிப்படையை அடைய முயற்சி செய்தது. பழைய இனக்கூட்டத்தில் விரும்பாதவர்களின் இயல்புணர்ச்சியும், தன் காரிய ஈடுபாடுள்ள போக்குகளும் மிகவும் பளமாகவும், இயற்கையான ஒற்றுமையை ஒப்புக் கொண்டுள்ளனர். ஆனல் எவ்வகைப்பட்ட இயற்கையான இன உறவை நிறைவேற்ற முடியாததை. வெளிப்பகுதியின் கட்டாயத் தேவையை நிறைவேற்றி உள்ளது. உதாரணமாக அயலாருடன் பழங்குடிமக்கள் சில சமயங்களில் வலுக்கட்டாயமாக ஒன்று சேர்ந்து எதிரிகளிடமிருந்து வரும் ஆபத்தை தடுக்க ஒத்துழைப்பார்கள். அதனுல் இன உறவை சேர்ந்த உறவினர்கள் இந்த சிக்கலான நிலேயிலும் பழங்குடி மக்களே ஒன்று சேர்த்து தேசத்திற்கு அழைத்து வந்தனர். அதனுல்தான் தேசீய மதமும் வளர்ச்சி அடைந்தது.

எகிப்து, பாபிலோன், அசரியன், பிரஷ்யன் இந்தியன். சீனு, யூதர், கிரேக்க அல்லது ரோமன்—நாட்டு மக்கள்கள் தேசிய வாழ்க்கையை வளர்த்து தேசிய மதத்துடன் ஒத்திருந்து, சமூக நலசீர்திருத்தங்களில் உயர்ந்த நிலேயை அடைந்தும், மதங்கள் பல மாறுதல்கஊயும் கடந்து வளர்ந்து வந்தது.

புதிய இனக்கூட்டமும், பழைய இனக்கூட்டமும் இடைவிடாது ஒற்றுமையாக சேராவிட்டால் ஒரு உண்மை யான வளர்ச்சி கிடையாது. அவ்வாருயின் மதம் தன்னுடைய செல்வாக்கைக் கொண்டு தொடர்ந்து செயலாற்ற வேண்டும் என்ருல், அதனுடைய உயர்ந்த முறைகள், தாழ்ந்த முறை களுடன் ஒன்று சேர்ந்து வளர வேண்டும்.

தேசிய மதத்தின் தெளிவாகக் குறிப்பிட்டுள்ள உறுப் புக்கள் :—தேசிய மதத்திற்கும், பழங்குடி மதத்திற்கும் உள்ள வேறுபாட்டின் தனிசிறப்புக்களே தேசத்தினுடைய உயர்ந்த சமுதாய முறையுடன் உன்னிப்பாக பார்த்தும் அதிலிருந்து வரும் தேவைகளேயும் அறிய வேண்டும்.

நாகரிகமற்ற மனிதர்கள், தெளிவற்ற உருவமில்லாத ஆன்மாவிற்கு வழிபாடு செய்து வந்தார்கள். நாகரிகமுள்ள மனிதன் சில சிறந்த நோக்கத்துடன் வழிபாடு செய்ய வேண்டும் என்று வற்புறுத்தினுர்கள். இவர்களுடன் தொடர்பு டைய ஒரு சீராயுள்ள பழங்குடி மக்களின் இனக்குழுவுடன் ஒப்பிட்டு பார்க்கும் பொழுது தேசீய வாழ்க்கை ஒரு சிக்க லானது.

தேசிய மதத்தின் முக்கியமான தன்மைகள் அல்லது சிறப்புக் கூறுகள் :—

1. தனிக் கோட்பாடு. (Particularism)
2. சமுதாய அமைப்புக்கள். (Social organization)
3. கோயிலும் அவற்றின் தெய்வீகத்தன்மையும். (Shrines and Temples).

4. தியாகச்சடங்கு Rituals and Sacrifice)
5. தெய்வீக எழுத்துக்கள் (Sacred writings)
6. அதிகமான ஒழுக்கத்தன்மை (Mores and Morality)
7. ஆத்மாவும், அழியாத்தன்மையும் (Soul and Immortality)
8. இறைவன் (Gods)

தனிக்கோட்பாடு :—நாகரிக முதிர்ச்சியற்றவர்களின் மதம் போல தேசிய மதமும் தனிப்பட்ட மதமாக முற்கால முறைகளில் சிறிதளவு இருந்திருக்க வேண்டுமே தவிர பொதுமையான மதமாக இருக்கவில்லை. அவர்கள் அந்த மதத்தினுடைய முக்கியத்துவத்தை பழுதுபடாமல் பேணி அடைய முயற்சி செய்தது; ஒரு குறிப்பிட்ட கூட்டத்தினுடைய முக்கியத்துவம் தான் தவிர, எல்லா மனிதத் தன்மையினுடைய பொதுமையான முக்கியத்துவம் அல்ல.

கிரேக்கர்களுக்கும், பார்பேரியனர்களுக்கும் இடையே உள்ள தனிச்சிறப்பை வேதங்களில் காட்சியளிக்கிறது. ஆரம்பத்தில் தனிப்பட்ட ஒரு கோட்பாடு மேற்கித்திய நாடுகளில் நல்ல முறையில் எல்லாவற்றிற்கும் எடுத்துக்காட்டாக பரவி வந்தது. யூதர்களின் கோட்பாட்டின்படி பொதுவாக ஒரு இனத்திலிருந்து தேர்ந்து எடுத்தல் கொள்கையான தேர்தலாக அமைந்திருந்தது.

சமுதாய அமைப்புக்கள் :—தனிப்பட்ட கோட்பாடு சமுதாய அமைப்பினின்றும் உருவெடுத்த தேசிய சமயத்தை சார்ந்ததாக இருக்கிறது. மதம் சமுதாயத்தின் ஒரு சிறப்புமிக்க அம்சமாக இருந்தது. அது தனிப்பட்டவர்களின் அனுபவத்தின் அடிப்படையில் முன்னர் அமைந்து இருந்தது.

சி. எச். டாய் (C.H. Toy) என்னும் தத்துவஞானி பல்லாண்டுக்கு முன்னர் சுட்டிக் காட்டும் பொழுது மதத்தின் வளர்ச்சியானது சமுதாய அமைப்பினை ஒட்டி செல்லுகிறது என்கின்றார். நாளா வட்டத்தில் பழங்குடிமக்கள் ஒன்று

சேர்ந்து ஒரு தேசத்தினை உருவாக்கினர் என்றும் குறிப்பிடு கின்றார்.

மதம் பரவலாக உயர்ந்த சமுதாயத்தின் அமைப்பாக இணைந்து செல்கிறது. முனிவர்களின் வகுப்பு வளர்ச்சியின் தேசீய மதம் ஓர் அமைப்பாக விளங்குகிறது. அவ்வாறு விளங்கும் பொழுது சமுதாயத்தின் மதிப்பையும் செல்வாக் கையும் தானுகவே கொண்டுள்ளது.

இந்து சமுதாயத்தில் ஜாதி என்னும் முறையானது சமுதாயத்தின் எல்லா அமைப்புக்களிலும் கட்டுப்பாடாக வும், பொருளாதார நாகரிக வாழ்க்கையிலும் ஜாதியானது இந்தியாவில் ஆட்கொண்டுள்ளது. ரோமானிய மதம்' கடவுளைப் பற்றி விளக்கிக் கூறும்பொழுது அம் மதத்தினு டைய சமுதாயத்தின் சிறப்புக்களையும் விளக்கிக் காட்டு கின்றது.

**கோயிலும் அவற்றின் தெய்வீகத் தன்மையும்:** தேசீய மதம் வழக்கமாக தொடர்ந்து தெய்வீகத் தன்மைக்கு வழக்கமாக மதிப்புக் கொடுப்பதும் தேசீய மதத்தின் ஆத்மீக உரு கொடுப்பதில்லை.

தேசீய ஒற்றுமை மாதிரியாக அமைவது பெரிய கோயில் கள், சில மையமான வழிபாடு, ஆகியவைகள் தேவையாக இருக்கின்றன.

ஏதன்ஸ் நகரிலுள்ள பார்த்தீரன் என்ற கோயிலும், அசரியன் மதத்திலுள்ள நைனவேக் என்ற பெரிய கோயிலும், பாபிலோனியன் நகரத்திலுள்ள பாபிலோன் என்ற கோயிலும் இவற்றிற்கு உதாரணமாகும். இக் கோயிலுள்ளக் கட்டிடங்கள் பெரும் மதிப்புக்குரியவையாகவும் இருக் கின்றன. அவைகள் முனிவர்களின் வகுப்பினை சக்தி வாய்ந்த தாகவும், துரிதமாக வளர்ச்சியுற்றதாகவும் அதிக சக்தி யுடையது என்பதையும் எடுத்துக் காட்டுகின்றது.

**தியாகச் சடங்கு:** மதமானது பலவிதமான சடங்குகளை தன்னுள் கொண்டுள்ளது. மதத்திலுள்ள, பாடல்கள், பல்லவி

கள், பாசுரங்கள், தெய்வீகப் பாடல்கள் எல்லா மதத்திற்கும் பொதுவாக இருக்கின்றன. ஆனால் தேசீய அளவில் முதல் இடத்தில் முழுமையாக அவைகள் அமைந்திருக்கின்றன. தேசீய மதத்தில் முதன்மை இடத்தில் அமைந்துள்ள சடங்குகள் எல்லாம் நடனங்களையும், ஊர்வலங்களையும் கொண்டுள்ளன. மத சம்பந்தமான நடனங்கள் அதிக வளர்ச்சியடைந்து சில வட அமெரிக்கர்களிடையே காணப்படுகின்றன.

இந்தியாவிலும் காணப்படுகிறது. இது போன்று சீனு, ஜப்பான், கிரேக்கம், ரோமன், இந்து மதங்களிலும் காணப்படுகின்றன. தியாகம், நடனம், ஊர்வலங்களைக் காட்டிலும் உலகமெங்கும் அதிக அளவில் பரவலாகக் காணப்படுகின்றது. ஆரம்ப காலத்தில் மனிதர்களிடையே பொதுவாக அது இருந்து வந்தது. அதிலும் கடவுளுக்கு முதலில் பிறந்த குழந்தையிடம் தனிப்பட்ட அளவில் தியாகம் அல்லது விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை அதிகமாக எதிர்பார்க்கப்படுகிறது.

தனி மனிதர்களின் தியாகம் விஞ்ஞான மத வளர்ச்சியிலும், வெளிப்படையாக அதிக அளவில் நிலவி வந்தது. இந்து சமுதாயத்திலும், சீனர்கள், ஜெர்மானி மதத்தினில் மெக்ஸிகோவில், ஆப்பிரிக்காவில் தனி மனிதர்களின் தியாகம் வளர்ச்சியுற்று வந்தது.

**தெய்வீக எழுத்துக்கள் :** தேசீய மதம், மொழி வளர்ச்சியிலும் அவற்றினை கற்றுக் கொள்வதிலும் நெருங்கிய உறவுடன் இருந்து இருக்கிறது. ஆரம்ப காலத்தில் எல்லா மதத்திலுள்ள முனிவர்களும் தாம் தாம் நம்புகின்ற மதங்களைப் பற்றியும் அவற்றின் உபயோகங்களைப் பற்றியும், உண்மைகளைப் பற்றியும் சில செய்தித்தாள்களிலும், சில கற்களிலும், மார் பல் கற்களிலும், களிமண், செங்கல்களிலும் எழுதி வைத்திருந்தனர் அக்கால மன்னர்களாலும், கோயிலுள்ள பெரிய வாசகச் சாலைகளிலும், மதங்களைப்

பற்றி எழுதி வைத்துள்ள தியாக எழுத்துக்கள் பாதுகாக்கப் பட்டு வந்தன. போரக்ஸ் என்னும்தத்துவஞானி இறந்தவர் களின் புத்தகம் என்ற எகிப்தின் கி.மு. 1580 முதல் கி.மு. 1000 வரை இந்தியாவிலுள்ள வேதங்கள் என்ற புத்தகத்தில் கி.மு. 1500 முதல் கி.மு. 800 வரை மதத் தத்துவங்கள் எழுதி வைக்கப்பட்டுள்ள விவரங்களை குறிப்பிட்டுள்ளன. பிராமணத் தத்துவம், இந்து மததத்துவம் போன்ற இதர வெளியீட்டு களினுலும் அவற்றினை நாம் தெரிந்து கொள்ளலாம். பைபிலிலுள்ள (Bible) தத்துவங்கள் அனைத்தும், தேசத்திற் குரியவையாகவும், உலகம் முழுவதும் பரவலாகவுள்ள மதத் தின் அடிப்படையில் எழுந்துள்ள தத்துவமாகும்.

**அதிகமான ஒழுக்கத் தன்மை :-**

எல்லா மதங்களும் தேசத்தின் அளவில் இருக்கின்றன. சில சமயங்களில் அவைகள் விரிவாக சமுதாயத்தின் குறிப் பிடத்தக்க நிகழ்ச்சியாகவும், சமுதாய வளர்ச்சியின் பிரதி பலிப்பாகவும் சமுதாயத்தில் அவைகள் எவ்வாறு இயங்கு கின்றன என்பதை எடுத்துக் காட்டாகவும் விளங்குகின்றன. மதம் சில தத்துவங்களை எடுத்து விளக்குகின்றது. குழுக்களி லுள்ள அதிகமான பேருகளுக்கு அவ் விளக்கத்தின் மூலம் அங்கீகாரம் அளிக்கின்றது. எல்லா மதத்தினுடைய வேதங் களும், ஒழுக்கத்தின் தத்துவங்களை கொண்டுள்ளன. அத் தத்துவங்கள் நாளா வட்டத்தில் நடைமுறையில் அப்போதைய தலைவனுக்கேற்ப அமைகின்றன. "டான் ஆப் கான்ஸியன்ஸ்" என்ற நூலினில் எகிப்து நாட்டைய ஒழுக்கத் தத்துவங்கள் உயர்ந்த நிலையில் எழுச்சியுற்றமையையும் அதிக அளவில் பரவி இருந்ததையும், பிரஸ்டட்டு என்னும் தத்துவ ஞானியின் அறிய முயற்சியின் உருவெடுத்து விவாதிக்கப்படு கின்றது. தேசிய அளவிலிருந்து மதமானது வளர்ச்சியுற்று முனிவர்களின் நிலைக்கு உலகம்முழுவதும் பரவலாக வளர்ந்து தீர்க்கத்தரிசி, விரிவாளர் சமுதாயத்தில் அங்கீகரிக்கப்பட்ட மதிப்பானவர்கள், சமுதாயத்தைக் காப்பாற்ற படுகின்றவர்

கள் தேவையில்லாதவர்கள் எல்லாவற்றையும் தன்னுள்ளே கொண்டுள்ள நிலையில் உள்ளவர்கள் என்று வளர்ச்சியுற்று வருகிறது.

**ஆத்மாவும் அழியாத் தன்மையும் :-**

உயிரோடு இருத்தல், இறப்பு, போன்றவைகள் எல்லா மதங்களிலும் தற்போது நம்பிக்கையாக இருக்கிறது. ஆரம்ப நிலையில் அவற்றின் பிரதிபலிப்புக்கள் சில இருந்தன. கிரேக்கத் தத்துவத்தின் படி கீழே ஓர் உலகம் இருப்பதாக எண்ணி வந்தனர். பைபிள் கதைகளில் சூனியக்காரி முடிவு என்ற அத்தியாயத்திலும் வாழ்க்கையின் இறப்புக்குப் பின்னர் துயரம் நிறைந்த தன்மையையும், விரும்பத்தகாத நிலையினையும் வழியுறுத்திக் கூறுகிறது. சில மதங்களிலும், இஸ்ரேல் போன்ற மதங்களிலும் உயிரைப் பற்றி குறிப்பிடும் பொழுது, உயிர் இறப்புக்கு பின்னர் ஆத்மா எங்கும் ஒரு பகுதியாக உருவெடுத்து காணப்படுவதில்லை. ஆனல் எகிப்திய தத்துவத்தின் குறிப்பிடத் தக்க அம்சமாக இருக்கும். மதத்தின் மையமான ஓர் இடத்தை அழியாத் தன்மை கோட்பாடானது அச்சு போன்று மையமாக அமைந்திருப்பதுடன் இதர தேசீய மதங்களிலும் அமைந்திருக்கிறது.

இறைவன்: எல்லா மதங்களும், பழங்குடிமக்களைப் போல் இல்லாமல், அவரவர்கள் தங்கள் விருப்பத்தின் முக்கியத்துவத்தை உண்மையான நம்பிக்கையுடன் கடவுளிடம் முறையிடுவார்கள். இந்த கடவுளை ஒரே இனம் என்று அடிக்கடி எண்ணுவார்கள். கிரேக்க ஜீனஸ் என்பவர் கடவுளுக்கும், மனிதர்களுக்கும் மதகுரு. இதனல் படிப்படியாக பல கடவுள்கொள்கை உடையவன் (Polytheism) ஒரு கடவுள்கொள்கை உடையவனக (Monotheism) மாறி கடவுளர் பலருள் உறையும் ஒரே இறைவனையே அவன் வழிபடுகின்ருன். ஒரு சமயத்தில் இந்த இயக்கத்தை ஒருமை கடவுள் கொள்கை என்று (Henotheism) அழைப்பார்கள். இதனுடைய கருத்து என்னவென்ருல் கடவுள்கள் இருந்த

போதிலும் ஒரே கடவுளை வழிபட வேண்டும். அவ்வாருயின் ஒவ்வொரு நேரத்தில் பல கடவுளை வழிப்பட்டதினுல் அதற்கு கதினேதிசம் (Kathonotheism) என்றே அழைப்பார்கள். மற்ற மதங்களை விட இஸ்ரேல் மக்களின் மதங்களினுடைய எண்ணங்கள் பல கடவுள் கொள்கை (Polytheism) யிலிருந்து ஒரு கடவுள் கொள்கைக்கு (Monotheism) மிகவும் வேகமாக சென்றது.

# 3. உலகப் பொது சமயம்

சமயத்தைப்பற்றி பொதுவாக பார்வையிடும் பொழுது நாகரிக முதிர்ச்சியுற்ற பழங்குடி மக்களின் சமயமும், தேசீய மதமும் சமய குருவிற்குரியபடி நிலையில் ஒருபுறமாக பார்க்கும் பொழுது சமயம் என்பது உலகம் முழுவதும் ஒரு பரந்த இயற்காட்சியாகவும், எல்லா இடத்திலும் பண்பினை எடுத்துக்காட்டும் தனிக் கூறு போன்றது. மற்றொரு புறமாக பார்க்கும்பொழுது சமயம் என்பது நிலையானதல்ல. ஆனால் அதனை நடைமுறையில் பார்க்கும்பொழுது உறுதியான முன்னேற்றத்தை அடைந்துள்ளது. ஒரு முக்கியமான குறிப்பிடத்தக்க மாறுபாட்டுபடி அதனுடைய நிகழ்ச்சிகளின் படிப்படியான தொடர்ச்சியை கி. மு. 800-முதல் 400-வரை உலகப் பொது சமயம் வருவதுணர்த்துகிற சமயத்தின் எழுச்சியின் மூலம் நாம் அறியலாம்.

நாம் இந்த வளர்ச்சியின்படி மூடநம்பிக்கையில்லாமல் கோட்பாட்டின்படி சென்றால், வருவதுணர்த்துகிறவர்கள் **(Prophets)** அதே சமயத்தில் தேசீய மதத்தின் கோட்பாட்டின் எல்லையை தாண்டி செல்லுகின்றனர். கடவுள் இந்த பூமிக்கே பிரபுவாக இருப்பவர் ஒரு தேசத்திற்கு மட்டும் தனி உரிமை கொள்ளமாட்டார். தேசீய மதம் மிகவும் உட்புறமாகவும், தனியியல் தன்மையுடையதாகவும் இருக்கும். ஆனால் உலகப் பொது சமயமோ அவ்வாறு இல்லாமல் மிகவும் பொதுமையாக உள்ளது. ஆதலால் பண்டைய கட்டுப்பாடுகள் உயர்ந்தெழுந்தது. நம்பிக்கை என்பது எல்லோரிடமும் இருப்பது. ஏனென்றால் அது உயர்ந்த முறைகளைக் கொண்ட சமயமாக இருப்பதாலும்

சமய பரப்பாளரின் முயற்சியும் அதன் பொதுமையும் ஆக மாறிவிடுவதுடன் தன்னுள் உரிமை கொண்டாடுகிறது.

பழங்குடி மக்களுக்காகவும் அல்லது தேசத்துக்கு ஈடாகவும் ஒரு மதம் உள்ளது. ஆகையால் நாம் **மனித வகுப்புக்காகவே** ஒரு மதத்தை அமைத்துக்கொள்வோம்.

**உலகப் பொது சமயத்தின் முக்கியமான சிறப்புக் கூறுகள்:—** தேசீய மதத்தின் வளர்ச்சியில் நாம் கண்டது என்னவென்றால், அதனுடைய தனி கோட்பாடு, தேசீய மதம், சடங்குகளும், ஒழுங்கு முறையும். பிறகு ஐந்தாம் நூற்றாண்டில் கி. மு. 750-முதல் தீர்க்கதரிசிகளின் கீழ் ஒரு இயக்கம் பொதுமையான தோற்றத்துடன் எழுந்தது. இயற்கைத் தத்துவத்தைக் காட்டிலும் இந்த இயக்கம் தனி தன்மையுடையது. சடங்குகளை காட்டிலும் இந்த இயக்கம் ஒழுக்க நூலாக உள்ளது. ஒழுங்கு முறையைக் காட்டிலும் அறிவாற்றலுள்ளதாகவும் மறை மெய்மை சார்ந்ததாகவும் இருக்கும்.

இந்த இயக்கம் பல கடவுள் கொள்கையிலிருந்து ஒரு கடவுள் கொள்கையை நோக்கி மாறிச் சென்றது. இந்த உலகப் பொது சமயத்தில் இனத்தை அல்லது இன மரபைப் பற்றியும் தனிச் சிறப்புடன் ஒரு வேண்டுகோளை மனிதனிடம் விடப்பட்டது. அருள் மீட்பு அல்லது நற்கதி இந்த இயக்கம் விருப்பறிவிப்பது எல்லாருக்கும் திறந்த வெளியாகும். கடவுளை வழிபடுவது என்பது ஒரே பொருள் என்பதுபோல தெய்வீக வழிபாடு முறையையும் எல்லா இடத்திலும் ஒரே மாதிரியாகத்தான் இருக்கும்.

**தீர்க்கதரிசி:—**இந்த இயக்கம் தீர்க்கதரிசிகளின் இயக்கமாக உள்ளது. தீர்க்கதரிசி என்பதற்கு கருத்து என்னவென்றால் யார் ஒருவன் உண்மையைப் பேசுகிறானோ அவன் தான் தீர்க்கதரிசியாவான். அவன் தன் சொந்த கடமையுடனும் தன் சொந்த அனுபவத்தை உறுதியாகக் கொண்டும் கடவுளுடைய அருளால் தெய்வீக உணர்த்தப்பட்ட அறிவினை

அடைவான். அவனுடைய அனுபவங்கள் வழக்குறிப்பு சமூக, அரசியல் முறையற்ற செயல் மூலம் (அமாஸ்வுடன் இருப்பதுபோல) அல்லது வீட்டு வேலையாள் துன்புறுத்தல் மூலமாகவும் (ஓசியுடன் இருப்பதுபோல) அல்லது போரும் கடுந் துன்பமும் மூலமாகவும் (ஐசையாயுடன் இருப்பது போல) அல்லது பெருமகிழ்ச்சி மூலமாகவும் (ஆர்பிக்யுடன் இருப்பதுபோல) அல்லது மெய் காரண மூலமாகவும் (கிரேக்க தத்துவ ஞானியுடனும் உபநிடத்தையும், லாவோட்ஸ்ஸையும் எழுதியவருடன்இருப்பதுபோல)அல்லது உளவியல் பகுப்பாராய்ச்சியின் அனுபவத்தினுடைய விருப்பம் மூலமாகவும் (புத்தருடன் இருப்பதுபோல) அல்லது கூராய்வினுடைய சச்சரவும் இயற்கையின் நல்லதும் கெட்டதும் மூலமாகவும் (சோராஸ்டருடன் இருப்பதுபோல) அனுபவங்கள் வந்தது.

பொதுமை:— உண்மைகளை இந்த தீர்க்கதரிசிகள் எல்லோரும் தடங்கல் ஏதும் இல்லாமலும் பரந்த நோக்கமுடைய இருபுற மாறுபாடும் விகிதயளவுடனும் இருப்பார்கள். தீர்க்கதரிசியாகிய அமாஸ் என்பவர் சொல்லுகிறார். கடவுள் நமக்கு எபிரேயர்களை மட்டும் கற்பிக்கவில்லை, தவிர பிலாஸ்டைஸ் பற்றியும் எதியோப்பியா நாட்டைப் பற்றியும் கற்பித்துள்ளார். மகாவீரரும், புத்தரும், மனிதருடைய துன்பத்தின் பிரச்சினையில் தொடர்பு கொண்டுள்ளனர். மகாவீரரும், புத்தரும் புத்த மதத்தை சிறப்பாக அடுத்த தேசத்துக்கு பரப்பினர். கிரேக்கர்கள் காரணத்துடன் ஒரு வேண்டுகோளை விடுத்தனர். அந்த வேண்டுகோள் என்னவென்றால் உலகப் பொது மனித மெய்க் காரணம் என்றால் என்ன? என்பதைப்பற்றி கேட்டனர். இந்த மெய்க் காரணங்கள் எந்தத் தேசத்துக்கோ அல்லது இன மரபுக்கோ தனித்து ஒதுங்கிய இன பொது பண்பு அல்ல. இந்த தீர்க்கதரிசிகள் பிரச்சினைகளுடன் பங்கு கொண்டுள்ளனர். அந்தப் பிரச்சினைகள் யாவன:—(1) உலகப் பொது மனிதப் பிரச்சினை. (2) சமூக முறையற்ற செயலின்

பிரச்சினே. (3) காரணத்துடன் கைப்பற்றுதலின் பிரச்சினே, (4) தனி நலம் பேணுகிறவரின் பிரச்சினே. (5) அறியாமை. காப்பில்லாத அச்சமும், இறத்தலும் போன்ற பிரச்சினே.

**தனியுரிமைக் கோட்பாடு:**—நாகரிக முதிர்ச்சியற்ற மனிதனின் முக்கியத்துவம் என்னவென்முல் அவன் ஒரு உறுப்பினராக நாகரிகமற்ற இனக் குழுவில் இருக்கவேண்டும். அல்லது குல மரபின் தனி மனிதனின் எண்ணிக்கையில் முரட்டுத்தனமானவர்களுக்கு மாருக ஒன்றுமில்லாதவர்களும் இருப்பார்கள். தேசீய மதத்தில் துறவிக் காட்டிலும் வழிப்படுபவர் தான் குரு என்று தனி மனிதன் அந்த குழுவில் கட்டுப்படுத்தப்பட்டான். ஆனுல் உலகப் பொது சமயத்தில் கடவுளுக்கும் தனி மனிதனுக்கும் நேரிடையான தொடர்பு இருக்கிறது என்றும் அவர்கள் பூசாரிக்கோ அல்லது கோவிலுக்கோ கீழ்ப்பட்டிருக்கவேண்டிய தேவையில்லே,

**நன்னெறி சார்ந்த கோட்பாடு :** உலகப் பொது சமயம் அமைப்பும், சடங்குகளேயும் விட்டு மாறிவிட்டன. சமயத்தின் முக்கியத்துவம் நன்னெறி சார்ந்ததாக உள்ளது. தீர்க்கதரிசிகள் பொதுமையாக நமக்கு அன்பு சமூக ஒழுங்கு, பொறுமை இவைகளேப் பற்றி போதிக்கப்படுகிமுர்கள். புத்தரும், ஏசுவும், பிறரையும் நம்மை போல் கருதி செயலாற்ற வேண்டும் என்று சொல்லுகிமுர்கள். கன்பூசியஸ் என்பவர் உன்னுல் ஒருவனுக்கு நன்மை செய்ய முடியவில்லேயாயினும் பிறருக்கு தீங்கு செய்யாமல் இரு என்று சொல்லுகிமுர். இதே கருத்தினே சோராஸ்டர் என்பவர் சொல்லுகிமுர்.

**அறிவு :** வழங்களே நம்பியிருப்பவர்களும் எதிர் செயல் அறிந்து செயல்படுகின்றவர்களும், தனிப்பட்டவர்களின் எண்ணங்களே ஊக்குவிக்கும் வகையில் மதிப்புக் கொடுத்து செயல்படுகின்றனர். இதுபோன்ற தத்துவ ஞானிகளாக மகாவீரரும், புத்தரும், கிரேக்கர்களும் நாம் காண்கிமுேம். புத்தருடைய தத்துவங்களே எடுத்துக் கூறும் நூல்கள் தனிப்

பட்டவர்களின் உளவியல் மனப்பான்மையை ஆராய்ந் துரைப்பதுடன் ஒழுக்கம் அறியளவை இயல் பிரச்னைகளை வலியுறுத்திக் கூறுகின்றனர். அதுபோன்று உபநிட முனி வர்கள் இந்தியாவில் உள்ள ஆறு தத்துவ ஞானிகளும் அவற்றினையே குறிப்பிடுகின்றனர். Lao-tsa, கன்பூயுசியஸ் என்னும் தத்துவ ஞானிகள் இவற்றினை நுணுகி ஆராய்ந்து கூறும் பொழுது அவர்கள் எண்ணங்களின் மீது எழுச்சியூட்டி வலியுறுத்திக் கூறி வருகின்றார்கள். கிரேக்க தத்துவ ஞானிகள் சாக்ரடீஸ், பிளாட்டோ, அரிஸ்டாடல் ஆகிய தத்துவ ஞானிகள் பழக்கத்தினால் ஏற்படுகின்ற நம்பிக்கையை மிகவும் தாக்கி குறிப்பிடுகின்றனர். மதங்களிலுள்ள நம்பிக்கை அனைத்தும் காரணங்களின் அடிப்படையில் எழுந் தவை என்றும் குறிப்பிடுகின்றனர்.

தேசத்தின் அளவில் இருக்கின்ற மதங்களும் வாழ்க்கை அறிவு வளர்ச்சியின் அடிப்படையில் எழுந்தளவை என்பதை மறுக்க முடியாது. ஆனால் முனிவர்களின் பற்றி இந்நிலையில் அறிய முற்படும்பொழுது அவை அனைத்தும் சார்புடையன வாகவும் மேலும் வழக்கங்களின் அடிப்படையில் எழுந்தவை யாகும் என்பதை மறுக்க முடியாது. மொத்தத்தில் அறிவு டைய வாழ்க்கை என்பது உலகம் முழுவதும் உள்ள மதங்களி டைய சுதந்திரமானது, திறந்திருக்கும் தன்மையுடையது, பழக்க வழக்கங்களை நுணுகி ஆராய்வது மேலும் வாழ்க்கை யோடு நெருங்கிய தொடர்புடையது அறிவு.

ஒருமையாளர் : (Mystical)

வருமுன் உரைப்போர் இயக்கம்அல்லது உலக முழுவதும் மதத்தினை பரப்புவர்கள் அறிவாளிகளாக இருக்கின்றார்கள் அதே போன்று ஒரு மையாளர்களாகவும் இருக்கின்றார்கள். அறிவாளிகளும் ஒருமையாளர்களின் அனுபவசாலிகளும் கடவுளை நம்பி அவற்றிற்கு வடிவம் கொடுத்து வாழ்க்கை யினை அவற்றின்படி அமைத்துக் கொள்ளுகின்றார்கள். இது போன்ற ஒப்பந்தங்கள் வெளிப்படிவங்கள் பழங்குடி மக்களின் குழு விழாக்களிலும், தேசீய மதங்களிலும் காண

லாம். பல மதங்களின் கருத்துக்கள் ஒருமையாளர் அனுபவத்தினை பெற்று இருக்கின்றனர். உபநிடதங்கள், தத்துவ ஞானிகள், முனிவர்கள் உண்மையினை காணுகின்றனர். புத்தர் போதி மரத்தடியில் ஞான உதயத்தினைக் கண்டு அறிந்தார். அமோஸ் என்னும் தத்துவஞானி கடவுளின் அழைப்பை அவருடைய ஆட்டுக்குட்டியின் ஒப்பந்தத்தின் போது கண்டறிந்தார். இசா என்னும் தத்துவ ஞானி அவருடைய ஜெருசலம் கோவிலில் கடவுளைக் காணுகின்றார். சோராஸ்டர் என்னும் தத்துவஞானி ஒருமையாளர் அனுபவத்தினை அன்னுருடைய 30வது வயதில் காணுகின்றார்.

ஒரு கடவுட் கோட்பாடு : உலக முழுவதும் உள்ள மதங்கள் பல கடவுட் கோட்பாட்டினை தேசீய மத அளவில் ஒதுக்குகின்றனர். அவ்வாறு ஒதுக்குகின்றவர்களில் சாக்ரடீஸ் என்னும் தத்துவ ஞானியும் கிரேக்க தத்துவ ஞானி பிளாட்டோவும் பயன்படுத்தும் வார்த்தைகள் எல்லோரும் சமமானவர்கள் (Pantheian) கடவுள் கடவுள்கள் அவர்களும் ஒரே கடவுளை நம்புகின்றனர். அதே போன்று உபநிஷ தத்துவ ஞானிகளும், மிக்க அறிவுடையவர்களும், அவருடைய காலத்திலும் ஒரே கடவுளை வணங்கி வந்தனர்.

லாவோட்ஸ் என்னும் தத்துவ ஞானியின் வழியிலும், கன்பயூசியல் என்னும் தத்துவ ஞானியின் வழியிலும், அமாம்ஸ்டா ஜோசண்டர் என்னும் தத்துவஞானி வழியிலும் பிரம்மன் என்னும் இந்துக்களின் பிரதிநிதியாக கடவுள் ஒருவரே என்னும் கோட்பாட்டினை வழிபட முற்படும். பொழுது அவர் எல்லாவற்றிற்கும் மேலான ஒருவர் என்று வழிவகுத்துக் குறிப்பிடுகின்றனர். அவர்கள் பல கடவுட் கொள்கையை ஒதுக்குவதற்குக் காரணம் என்னவெனில் ஒழுக்கமின்மை கட்டுப்பாடு அற்றவை, ஆத்மா இல்லாதவை ஆகியவைகளே. இது போன்று ஒதுக்குவதற்குக் காரணமாக அமைகின்றது.

# 4. சமய உளவியல்

ஆரம்பமும், வளர்ச்சியும் உளவியலின் தொடர்ச்சிகள் முற்காலத்திலும் பிற்காலத்திலும் சமய பகுதிக்கும், பிறப்பு மரபு பற்றி நூலுக்கும் நெருங்கிய தொடர்பு இருந்து வந்தது மனிதனுடைய அமைப்பானது அவனுடைய மதம், இயற்கை அமைப்புகள் என்ன, எப்பொழுது என்ற கேள்வியின் முன் நிலையிலும் அவனுடைய வாழ்க்கையின் உள் அமைப்பு களிலும், நாம் மத சம்பந்தப்பட்ட விசையிணைப்புக்களைக் காண்கிறோம், இவைகள் எல்லாம் இயற்கை உளவியல் மதத்தின் ஆரம்ப வாயிலாக அமைகின்றது. சில பதில்கள் இது போன்ற வினுக்களுக்கு திருப்தி அளிக்கும் வகையில் அமையவில்லை. விஞ்ஞான ரீதியிலும் அவற்றினை நோக்க முடியவில்லை.

இயற்கையின் அடிப்படையில் மதம் இருக்கின்றது என்ற கொள்கையானது எங்கும் பரவலாக விளங்குகின்றது. மனிதனும் அவற்றினைச் சார்ந்துள்ளான் என்றும் பொது வாக பேசப்படுகின்றது. மனிதன் மதத்தை சார்ந்தவன் என்று சொல்லப்படுகின்ற இடங்களிலும் அவனிடையே மத உணர்வு இருக்கின்றது என்ற காரணத்தினுலும் உளவியல் பிரச்சனைகளை மதத்தின் ஆரம்பநிலையில் தீர்த்துக் கொள்ளும் வகையில் மிகவும் சுலபமான முறையில் தெளிவாகச் செய்யக்கூடிய வகையில் மத உணர்வுகள் வளருகின்றன. மத செயல் திறன் மதத்தினின்றும், திருப்தி அளிக்காத வகையில் சில நேரங்களில் பேசப்படுகின்றது. அவ்வாறு பேசப்படுவதற்கு காரணம் பழங்காலங்களில் செயல்திறன் உளவியல்கள் அடிப்படையாக இருக்கின்றன. மதத்தினை

தனியாக பிரித்து பார்க்கும் பொழுது அவற்றின் செயல் திறன், ஆற்றும் தன்மை, முதலியவைகள் நம் அறிவுக்கு எட்டாத அளவில் பிரித்துக் காட்டப்படுவதுடன் மனித மன நிலையின் அடிப்படை உரிமைகளிலும் இணைந்து பேசப் படுகின்றது.

மத அனுபவம் சில மூலப்பொருள்களில் அடிப்படையில் அமைகின்றது. நிலையான வாழ்க்கையை கொண்டுள்ளது, மத உளவியல் மனிதனுடைய பொருள் வீண் பேச்சு ஆகியவற்றை கொண்டுள்ளது. மனிதனுடைய உளவியல் தன்மையாக பிரித்துக் காட்டப்படுவதில்லை. மதத்தின் தத்துவங்கள் அவற்றின் செயல் திறன்கள் மூலமாகவும், மத வாழ்க்கையின் மூலமாகவும், மத சம்பந்தப்பட்ட விழாக் களிலும் வெளிப்படையாக தெரிகின்றது.

டாக்டர் மேக்டாக் என்ற தத்துவஞானி அவற்றினை பாகுபடுத்திக் கூறும் பொழுது, இயல்பு உணர்ச்சியும், உணர்ச்சிகளும் சேர்ந்து பல உணர்வை உண்டு பண்ணி இயல்புணர்ச்சி வெளிப்படும் பொழுது மத உளவியல் என்று குறிப்பிடுகின்றார். மேலும் மதத்திற்கு ஒரு தோற்றம் இருக் கிறது என்றும், கடவுளின் உறவு உணர்வின் அடிப்படையில் அமைந்தது என்றும் அவை பயத்தினால் எழுந்தவை அல்ல என்றும், பகைமையினின்றும், மிகுதியான அளவு பராமரிக் கப்பட்டு வருவதும் மத உளவியல் என்று W. Robertson Smith குறிப்பிடுகின்றார்.

நாம் உளவியல் பிரச்சனைகளையும் மதத்தினின்றும் அதிக அளவில் பாகுபடுத்தி ஆராய முற்படும் பொழுதுதனிப்பட்ட வகையில் உளவியல் கொள்கைகள் ஆரம்பத்தில் எவற்றினை தீர்மானிக்கின்றன; மதத்தின் வளர்ச்சி என்ன? அவற்றின் கண்டுபிடிப்பு என்ன? போன்ற விவரங்களை தேடி ஆராய முனைகின்றோம். மனிதன் தன்னுடன் பலவிதமான நடத்தை களையும் உளவியல் உண்மைகளையும் மதத்திற்குள் நுழைத்துக் கொள்ளுகிறான்.

நவீன உளவியல் அறிஞர்கள் துணிவாற்றல் அறிவு நிலைக்கு புறம்பாக நெருங்கிய உறவுடன் உளவியல் மதத் தத்துவங்களும் கொண்டுள்ளதாக அரிசடாட்லின் என்னும் உளவியல் தத்துவஞானி வலியுறுத்திக் கூறுகின்றார் J S. லூபா என்னும் தத்துவஞானி அவருடைய புத்தகத்தில்உள வியல் ஆரம்பமும் மதத்தின் இயற்கை நிலையையும் குறிப் பிடும் பொழுது விரும்பிச் செய்யக்கூடியவை, உணர்ச்சிமய மானவை, சில நேரங்களில் வெட்பதட்ப நிலைக்கு ஏற்ப ஒவ்வொரு நேரங்களிலும் மனசாட்சி மாறக்கூடிய அளவில் அமைபவை. அவை உண்மையில் நடைபெற்ற சம்பவங்களை விளக்கி காட்டியவை. ஆனால் அவற்றிற்கு தடையாக நிற்பவை அல்ல என்றும் குறிப்பிடுகின்றார்.

### உணர்ச்சி வசப்பட்ட அல்லது பற்று மிக்க தத்துவங்கள்:—

மனநிலையின் போக்கானது ஒருமையாளர்களின் அனு பவத்தின் அடிப்படையில் விண்ணப்பித்து உணர்ச்சி ஊட்டி தீர்மானிக்கிறது. ஒவ்வொருவரும் இது போன்ற உணர்ச்சி அனுபவங்களையும் ஆண்களும் பெண்களும் பெற்று இருக் கின்றனர். சில நேரங்களில் இவைகள் தீவிரப்படுகின்றன. சில நேரங்களில் இவைகள் மிகவும் மிதமாக செயல்படு கின்றன. சில மனிதர்கள் வழக்கத்திற்கு அதிகமாகவும் இவை ஆட்கொள்ளும் பொழுது உணர்ச்சி வசப்பட்டு செய லாற்றி இருக்கின்றனர். அதுபோன்று செயலாற்றுகின்ற வர்கள் ஒருமையாளர்கள் (Mystic) என்று குறிப்பிடுகின்றனர் உணர்ச்சியானது ஆரம்பநிலையில் பரவலாக அமைந்திருந்த போதிலும் அவை செயல்படும் போது தீவிரம் அடைந்து மிகுதியான வளர்ச்சியின் மதத்தின் உணர்ச்சிகள் அவசிய மானவையாகும். மையமாகவும் கொண்டு திகழ்கின்றனர். பேராசிரியர் வில்லியம் ஜேம்ஸ் அவருடைய புத்தகத்தில் பலவகைப்பட்ட மத அனுபவங்களை குறிப்பிடும் பொழுது மதத்திற்கு அடித்தளமாக அமைவது உணர்ச்சிகள் என்று குறிப்பிடுகின்றார். தத்துவமும், இறைமை நூல் சூத்திரங்

களும் இரண்டாம் தரமானவை என்றும் ஒரு புத்தகத்தி னின்றும் மொழி பெயர்த்து பிரிதொரு மொழிக்கு மாற்று வதும் என்றும் குறிப்பிடுகின்றுர். மதவுணர்வுகள் எவ் விதத்தில் அமைந்திருக்கின்றன என்பதை அறிய முற்படும் பொழுது அக்கேள்விக்கு பலவிதமான பதில்கள் கிடைக் கின்றன.

லுகூர்டியல் என்னும் தத்துவ ஞானி மத உணர்வு என்பது பயத்தின் அடிப்படையில் எழுவதாக குறிப்பிடு கின்றுர். "ஷரியர் மார்க்கர்" என்னும் தத்துவ ஞானி குறிப் பிடும் பொழுது மத உணர்வுகள் பரிபூர்ணமாக கடவுளே சேர்ந்தது என்றும் மத நடை முறை செயல்கள் உணர்ச்சி யின் அனுபவத்தில் உடன் நிகழ்கின்றன என்றும் அவை இல்லையெனில் அவற்றிற்கு பொருள் இல்லை என்று குறிப்பிடு கின்றுர். மதவழியின் பாட்டின்போது நடைபெறும் சடங்குகள், விழாக்கள் ஆகியவைகள் எப்பொழுதும் பொருள் அற்றவை என்கின்றுர். ஆனுல் பற்றுதல் மிக்க முக்கியமானவையாக அவைகள் அமைக்கப்படுகின்றன என்று கூறப்படுகின்றுர். மதவழிபாட்டு முறை, உணர்ச்சி யின் அனுபவத்தின் இணைந்துள்ளன என்று குறிப்பிடுகிறுர். கடவுளிடம் உடலை அற்பணிக்கும்பொழுது உணர்ச்சி வசப் பட்டு செயல்படுகின்றன என்று குறிப்பிடுகின்றுர். தோத்திர பாடல்கள் வழிபாட்டாளர்களில் உணர்ச்சி வசப்பட்டு கட்டுபடுத்தி கொள்கையின் ஒரு பகுதியாக அமைகின்றன. எப்படி இருந்தபோதிலும் உணர்ச்சிகளை கோட்பாடு பற்றுடன் எழுப்பெற்ற மதத்தின் முக்கியத்துவத்தின் பலனுக இணைந்து செயல்படுகின்றன. ஆனுல் தனிப்பட்டவர் களின் பலகீனமாகவும் அவற்றின் முடிவில் அமைகின்றது.

## அறிவும் அல்லது இயல்விளக்கமூலப்பொருளும்

இயல் விளக்க மூலப் பொருள் என்பது மதத்தின் நம்பிக்கையில் எழுவது அல்லது கடவுள் இருக்கின்ருர் என்பதை உறுதிபடுத்துவது செயின்ட் தாமஸ் அக்கியுனுஸ் என்னும் தத்தவ ஞானி ஐந்து வழக்க நிருபணங்களில் ஒன்று, உயிர் தத்தவ ஆராய்ச்சி நிரூபணம், செயின்ட் அக்கியுனுஸ் நியாய வின் நிருபணம் போன்ற முயற்சிகள் மனிதனுடைய மத நம்பிக்கைக்கு அடித்தளமாகவும் இயல் விளக்க பொருளுள் ஒதுக்கீடாகவும் அமைகின்றது. தற்காலத்தில் மத அனுபவத்தில் விவாதம் சில நேரங்களில் ஏற்படுகின்றது. ஒரு மனிதனுடைய மதம் கடவுளின் அனுபவத்தில் எழுகின்றது. கடவுள் இருக்கின்ருர். அவர் நிச்சயமாக இருக்கிருர், அவர் உலகமெங்கும் இருக்கின்ருர். போன்றவைகளும் மனித மத அனுபவத்தில் இடம் பெறுகின்றன.

நவீன உளவியல் முழுமையான போக்குகளும் நமக்கு நம்பிக்கையும் உணர்ச்சியும் விளக்கின்றன. மறுபுறம் இறமை நூலும் மதத்துவஞானிகளும் நமக்கு நுண்ணியக் காரணங்களை எடுத்து இயம்புகின்றன. எனவே நாம் மதப் பற்றுமிக்கவர்கள் ஆகின்ருேம். அவைகள் மட்டும் மதத்தின் நம்பிக்கையை நமக்கு ஏற்படுவதல்ல. இதுபோன்று காரணம் கண்டறிய முற்படும் பொழுது பொதுவாக அவற்றினையே இயல் விளக்கம் என்று குறிப்பிடுகின்றனர்.

இயல் விளக்க மூலப் பொருள்கள் சில நேரங்களில் சிறிய பகுதிகளாக இருக்கின்றன. நம்பிக்கை என்றும் பட்டு பாட்டின் அடிப்படையிலும் அளவுக்கருவி என்னும் தத்துவத்தின் பகுதியிலும் முதன்மையாக திகழ்கின்றன. நம்பிக்கை என்பது அனுபவரீதியில் ஆரம்பம் ஆவதில்லை. உயிர் தத்துவ ஆராய்ச்சியாளர்களின் விவாதத்தின்படி கடவுள் இருக்கின்ருர் என்ற விவாதமானது இயல்பானது. சந்தேக படுவதற்குரியது. இயல் விளக்கத்திற்கு எந்நிலையிலும் அள

வியலின்படி காணும் நிலை நிரந்தரமாக இருப்பது மத நம்பிக்கையை தீர்மானிப்பது மதத்தின் உண்மையை அளவிடும் கருவியாக எடுத்து கொள்ளால் ஆகாது — பெர்க்ஸான் என்னும் தத்துவஞானின்படி உள்ளணர்வு உண்மையை வழிகாட்டியாகவும் புத்திசாலிதனத்தை விட மதிப்பு உடையதாகவும் இருக்கிறது. மத நம்பிக்கையானது இயல்விளக்கயத்துவத்தின் மூலபொருளாக அவற்றின்சூத்திரமாகவும் மிகவும் உயர்ந்த இடத்தில் இருப்பதாகவும் மறக்கின்றனர். பாஸ்கல் என்னும் தத்துவ ஞானி குறிப்பிடுகின்ருர். இருதயமானது அதனுடைய உணர்ச்சிகளைபெற்று இருக்கிறது. அதே நேரத்தில் மூளையானது அவற்றினை அறிந்து கொள்வதில்லை என்று குறிப்பிடுகின்ருர். அனுபவம், உணர்ச்சிகள் ஆகியவற்றுடன் இணைந்து கடவுளின் தீர்ப்பு இருக்கிறது என்று எண்ணுகின்ருேம் — ஒரு மனிதனுடைய மதம்; இயல்பான தன்மையை உடையது. ஆனுல் மோசமான நிலையில் இருக்கும் அவன் நம்பலாம். அவற்றின் நிலைகளை பாகுபடுத்தி ஐயப்பாட்டுடன் நோக்கலாம் — (உதாரணம்) அல்காணி.

ஒழுக்கத்தின் தத்துவங்கள் ஒழுக்க சட்டங்கள், பூசல்களின் பயனுக தனிப்பட்ட மனிதர்கள் ஒரு முடிவெடுத்து வெளியேறுகின்றனர். ஒழுக்க பூசல்களின் பயனுக மத நம்பிக்கையில் இரண்டு வழிகள் பிறக்கின்றன. ஒன்று எப்பொழுதும் மனித உணர்ச்சிகள் பலமான பூசல்களின் இடையே எழுகின்றது. கடவுளின் நீதி நூலின் அடிப்படையில் நல்ல எண்ணங்களில் பார் அவற்றின் நோக்கங்கள், வலிமைகள் விளங்குகின்றன. இரண்டவதாக ஒழுக்க பூசல்கள் கடவுள் நம்பிக்கைமீது எழுகின்றன என்று சிலர் நம்புகின்றனர். அவைகள் நடைமுறையில் தேவைப்படுகின்றன. இயல் விளக்கத்தின் அடிப்படையில் அனுபவம் முதல்வதாக இருக்கின்றது. இரண்டாவது வகையினர் கடவுளை நம்பவில்லையாயின் அவர்கள் நல்லவர்கள் ஆக இருக்க முடியாது என்ற எண்ணமும் மக்களிடையே எழு

கின்றது. அவர்களுடைய நம்பிக்கை தேவையின் அடிப்படையில் எழுகின்றது. இது போன்று உளவியல் முறையில் அறியமுற்படும் பொழுது உளவியல் அறிவாளர்கள் அவற்றினை விருப்பத்தின் அடிப்படையில் நிறைவேறுவதாக குறிப்பிடுகின்றனர். நம்பிக்கையின் அடிப்படையில் உண்மை எழுகின்றது. அவற்றினைநடை முறையில் தேவையின் அடிப்படையில் காணலாம். மன மானது அவற்றிற்கேற்ப நம்பிக்கையில் ஏற்றுக் கொண்டுள்ளது.

# 5. உணர்த்தப்பட்ட அறிவு

## REVELATION

உணர்த்தப்பட்ட அறிவினுடைய கருத்தானது ஏதோ ஒன்றின் கருத்தின் மிகவும் கடுமையாக நமக்கு காட்டி வெளிப்படுத்துகிறது. உணர்த்தப்பட்ட அறிவில் கடவுள் நம்மிடமிருந்து எதனை விரும்புகிருர் என்றும், அவருக்கு நம்மிடமிருந்து என்ன தேவைப்படுகிறது என்பதனைக் காட்டுகிறது. ஆனுல் கடவுள் நமக்கு அவர் எப்படிப்பட்ட வர், அவருடைய தோற்றம் எப்படி இருக்கும் என்பதனை நமக்கு புலப்படுத்த மாட்டார்.

உதாரணமாக: மோசஸ் என்பவர் கடவுளுடைய முகத்தை பார்த்ததாகவும், வாழ்ந்ததாகவும் கூறுகின்றுர்கள். கடவுள் தொடக்கத்தில் அவருடைய அடையாளத்தை அல்லது சைகைகளை நமக்கு தெரிவித்துக் காட்டுகிருர். அவரை நம்முடைய அனுபவ முறைகளாலும் நமக்கு பழக்கப் பட்ட முறைகளாலும் எளிதில் நாம் அவரைப் பற்றி புரிந்துக் கொள்ளலாம்.

அவ்வாருயின் கடவுள் எல்லா மனிதர்களுக்கும் நேரிடை யாக உணர்ந்தறிய அல்லது காட்சியளித்தார் என்றுல், கடவுளால் எழுதப்பட்ட அந்த கோட்பாட்டினை ஒரு பிரச் சனையின்றி ஒத்துக் கொள்ளலாம், ஆனுல் உணர்த்தப்பட்ட அறிவினில் ஓர் வினு—அதாவது இது கடவுளுடைய சொல் என்று நமக்கு எப்படி தெரியும்? "விருப்பமில்லாதது எழாதது" ஏனென்றுல் அந்த சொல்லே கடவுளே வெளிப்படுத்தியிருக் கிருர். அவ்வாருயின் இதனை யாராவது மறுத்தால் என்றுல்,

அதனை இவ்வாறு கேட்பது போல இருக்கும் அதாவது நான் ஏன் என்னுடைய கடமையை செய்ய வேண்டும்? அல்லது நான் ஏன் உண்மையை ஒத்துக்கொள்ளவேண்டும். அப்படியிருந்தால் ஏதோ ஒன்று ஒருவனுடைய கடமை என்றால், அதனை அவன் செய்து முடிக்க வேண்டும்.

உணர்த்தப்பட்ட அறிவு என்பது எதனை புலப்படச் செய்கிறது அல்லது ஏதேனுமொரு உண்மையை புரிந்துக் கொள்ளும்படி கடவுளுடைய செயலினால் நேரிடையாகவோ அல்லது மறைமுகமாகவோ நமக்கு எடுத்துக் காட்டுகிறது.

உணர்த்தப்பட்ட அறிவு இரண்டு வகை கருத்தினைக் கொண்டது. (1) பொதுவான உணர்த்தப்பட்ட அறிவு. (2) சிறப்பான உணர்த்தப்பட்ட அறிவு,

**பொதுவான உணர்த்தப்பட்ட அறிவு: (General Revelation)** மிகவும் பரந்த மனப் பான்மையில் உணர்த்தப்பட்ட அறிவு என்பது இயற்கையின் முறையாகும். அது கடவுளிடம் முடிவான தோற்று வாயுடன் இருப்பதால் அதனுடைய கருத்தினை வலியுறுத்த முடியாது. பரந்த நோக்கமுடைய மனப்பான்மையில் மனித அனுபவத்தில் ஒழுங்கு முறைமையின் வளர்ச்சியும், சமய உணர்வுடைய பல சொற்றொடர்களும் வரலாற்றில் உள்ளாமையால் அதற்கு உணர்த்தப்பட்ட அறிவுகள் என்றும் அது மனித எண்ணத்தையுடைய வாழ்க்கையின் உறவினை கடவுளுக்கு வெளிப்படுத்தி காட்டுகிறது.

**சிறப்பான உணர்த்தப்பட்ட அறிவு :** அறிவு என்பது கடவுளிடமிருந்து தொடர்புக் கொண்டு மனிதனுக்கு புலப்படுத்துவது. அந்த அறிவினை மனிதன் எந்த வகையிலும் கடவுளின் தொடர்பின்றி பெற முடியாது. பழைய இறைமை நூலின் கற்பனை கருத்தானது சமய கோட்பாடுகள் அனைத்தும் இயற்கை இகந்த கால வண்ணம்படி அறிவுறுத்தப்பட்டுள்ளது. கடவுள் பல செய்திகளை வருவதுரைப்பவர் மூலமாக அனுப்பியிருக்கிறார். அவர்களை கடவுளுடைய ஆட்பேராகப் பேசுபவர் என்று எண்ணினர்.

